ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2038
புரட்டாசி - செப்டம்பர் 2007

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்



**30-8-2007**
குருபூசை விழாவில்
**திரு. எஸ். சின்னப்பா அவர்கள்**
"அறமனச் செம்மல்" பட்டம் பெறுதல்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

### சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆதீன இணையதள முகவரி :

website : www.kundrakudiadheenam.org.

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : **தவத்திரு குன்றக்குடி அடிகளார்**

| | |
|---|---|
| திருவள்ளுவராண்டு 2038 (சர்வசித்து) | மாதம் : புரட்டாசி |
| மணி : 21 | இதழ் : 9 |




# இன்றைய தேவை முன்மாதிரிப் பள்ளிகள்!

*"அன்னசத்திரம் ஆயிரம் வைத்தல்*
*ஆலயம் பதினாயிரம் நாட்டல்*
*பின்னருள்ள தருமங்கள் யாவும்*
*பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல்*
*அன்னயா வினும் புண்ணியம் கோடி*
*ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்"*

– என்று பாரதி சொன்னானே!

ஏழைக்கு எழுத்தறிவித்தல் கோடி புண்ணியம் என்று எப்பொழுது பாரதி சொன்னான்? பாவத்தின் கழுவாய், புண்ணியந் தேடல் அன்ன சத்திரம் வைத்தலும், ஆலயம் கட்டலும் என்று நம்புகின்ற சமூகத்தின் போக்கை மாற்றத்தான் பாரதி உரக்கக் கூவினான், வயிற்றுக்குச் சோறிடுவதை விட்டு அறியாமை இருளை அகற்ற வறுமையை விரட்டி அறிவு தீபத்தை ஏற்றி வைத்திடு என்று மன்றாடினார்! கல்வி ஒரு சிலருக்கு மட்டுமே ஏகபோக உடைமையாய் இருந்த காலம்! கல்வி வெளிச்சம் பரவலாய்ப் பலரை சென்றடையாத நேரம்! இன்று கல்வி எல்லோருக்கும் உரிய பொது உடைமையாக மாறிவிட்டது, அனைவருக்கும் கல்வி என்பது அரசின் அறிவிக்கப்பட்ட கொள்கைப் பிரகடனம்! ஆனால் அனைவருக்கும் வழங்கப்படும் கல்வி, சமவாய்ப்பு, சமதகுதியை உருவாக்குகின்றதா? இன்று அரசு சமச்சீர் கல்வித் திட்டத்தினை நடைமுறைப்படுத்த தயாராய் உள்ளது, வரவேற்புக்கும், பாராட்டுக்கும் உரியது! தலைசிறந்த சிந்தனையாளரும் இந்திய

ஆட்சிப்பணியாளரும் ஆகிய இறையன்பு கேரளாவில் மலைப்பிரதேசத்தில் உள்ள ஒரு பள்ளிக்கூடத்தைப் பற்றி முன் உதாரணமாக குறிப்பிடுவார். மாணவர்கள் வராமல் இருப்பதைவிட, ஆசிரியர்கள் வராமல் இருக்கும் நாட்கள் அதிகமாய் உள்ள அந்தப் பள்ளியில் அருமையான ஆசிரியர்கள் இருவரும் (கணவனும், மனைவியுமாய்) இணைந்து பணியாற்றி வந்தார்கள்! இலட்சியத்தை மணந்து கொண்டவர்கள்! ஒற்றைப் பனைமரத்தால் அடையாளம் காட்டப்பட்ட (மழை மறைவுப் பிரதேசமாய் இருந்த) அந்த மலை இவர்கள் வருகைக்கு பின்தான் பசுமையாய் புன்னகைபூக்கத் தொடங்கியது! மாணவர்களுக்கு இறுக்கமான வகுப்பறை இல்லை! ஆற்றங்கரை, குளத்தங்கரை, பசுஞ்சோலை என்று எங்கும், எங்கும் வகுப்புகள் நடக்கும். திறந்தவெளிப் பல்கலைக்கழகம் மாணவர்களுக்கு மனனக்கல்வி (Memory) இல்லை! சொல்வதைச் சொல்லும் கிளிப்பிள்ளை மொழி அல்ல! மாணவர்கள் கற்றுக்கொள்வதைவிட கற்பதற்கு தயார்படுத்தினார்கள். மீன்களிடம் இருந்து நீந்தக் கற்றுக்கொண்டார்கள். குயில்களிடம் இருந்து கூவக்கற்றுக்கொண்டார்கள். மரங்களை நலம் விசாரித்தார்கள். இயற்கையிடம் இருந்து கவனமாய்க் கற்றார்கள். கீழிருந்து மேல்நோக்கிப் பீறிட்டு எழும்பும் நீர் ஊற்றைப் போல் மகிழ்ச்சி பொங்கக் கற்றார்கள். கற்றலின் கனிந்த முறையில் அவர்களின் கல்விமுறையில் இருந்தது. பள்ளிக்கு வராத மாணவர்கள் தாமே பள்ளிக்கு வருவதை மகிழ்ச்சிப் பொழுதாய் எடுத்துக்கொண்டார்கள். கற்பித்தல் என்பது மூளைப்புலனில் செய்திகளைத் திணிப்பது அல்ல. ஒவ்வொருவரின் தனித்திறமையை வளர்த்துக்கொள்வது. இறையன்பு அவர்கள் குறிப்பிட்ட இப்படிப்பட்ட முன்மாதிரி பள்ளிகள் இன்று தேசத்தின் தேவை!

*"நல்லதோர் வீணை செய்தே - அதை*
*நலம் கெடப்புழுதியில் எறிவதுண்டோ!"*

என்று பாரதி கூறியதைப் போல,

தாயின் கருப்பையில் இருந்து வெளியேவரும் விலங்கை மனிதனாக்கும் பணியைத்தான் கல்வி உலகம் செய்து தரவேண்டும்.

கல்வி வறண்டபாலையை, வளம் கொழிக்கும் பசுஞ்சோலையாய் மாற்றட்டும்! இருளை விரட்டும் உதய ஞாயிறாய் ஒளிவீசட்டும்!

91/1

# அன்றாட வாழ்வில் அச்சமின்மை

அச்சமே கீழ்களது ஆசாரம். அன்றாட வாழ்வில் அஞ்சி அஞ்சிச் சாகின்றவர் பலர். அச்சம் உடையவர்கள், வாழ்க்கையில் முன்னேற மாட்டார்கள். பயனும் இல்லை. அச்சத்தின் காரணமாகவே வாழ்க்கையை, செல்வத்தை, நட்பை இழந்து அல்லற்படுகிறவர்கள் பலர்.

அச்சம் ஆட்கொள்ளும் வாயில்கள் என்னென்ன? சுறுசுறுப்பாக இல்லாமல் சோம்பிக் கிடத்தல், இடர்ப்பாடுகளைச் சந்திக்க அஞ்சுதல், விமர்சனத்திற்குக் கூச்சப்படுதல், மரணத்திற்குப் பயப்படுதல், நாளை என்ன நடக்குமோ என்று ஐயுறுதல், நண்பர்களின் நடத்தையில் ஐயுறுதல் ஆகியன குறிப்பிடத்தக்க வாயில்கள்!

யாதொரு பணியுமின்றி வறிதே சோம்பிக் கிடப்பவர்களை அச்சம் ஆட்கொள்ளும். அச்சப்படுவோரின் வாழ்க்கை முரண்பட்ட நிலையினது. அவர்கள் செயல் செய்ய அச்சப்படுவர்; ஆனால் சுகமாக வாழவேண்டும் என்று ஆசைப்படுவர்.

இந்த முரண்பட்ட நிலையில் செல்வம் வருவதற்குரிய வாயிலாகிய உழைப்பாற்றல் வற்றிப்போகிறது. அதனால், அடுத்த வேளை சோறு கிடைக்குமா? பிழைப்பு நடக்குமா? என்ற அச்சம் ஆட்கொண்டு விடுகிறது. சோம்பலின் காரணமாகப் பிறக்கும் அச்சம், வாழ்க்கை முழுவதையும் கெடுக்கும். இதனை, அறவே தவிர்த்திட வேண்டும்.

ஒவ்வொரு வினாடியையும் கணக்கிட்டுக் காரியங்களை செய்தல் வேண்டும்; பொருளை ஈட்ட வேண்டும்; வாழ்வாங்கு வாழ வேண்டும். உழைப்புக்கு அஞ்சக்கூடாது. கடின உழைப்புக்கும் அஞ்சக்கூடாது. உழைப்புக் களத்தில் தோன்றும் இடர்ப்பாடுகள் அனைத்தும் பயன் தருவனவே! படிப்பினைகளே! அஞ்சற்க!

வாழ்க்கையை விளக்கமுறச் செய்து வளர்ப்பதில் விமர்சனமும் ஒன்று. தற்பெருமையுடைவர்கள் விமர்சனத்தைக் கண்டு அஞ்சுவார்கள். விமர்சனத்திற்கு அஞ்சுகிற அச்சம், அறியாமையை வளர்க்கும்; ஆற்றலைக் கெடுக்கும்; வளர்ச்சியைத் தடுக்கும்.

*- தவத்திரு குன்றக்குடி அடிகளார்*
*நூல்வரிசை தொகுதி - 6*

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 79. நட்பு

இருவரும் ஒத்த உரிமைகளும் நலன்களும் உடையராக இடையறாத அன்பு பூண்டொழுகல் நட்பு. நட்பு மானிட வாழ்க்கையின் இன்றியமையாத்தேவை. காதல் வாழ்வைத் துறந்து வாழ்தல் இயலும். நட்பின்றி வாழ்தல் இயலாது.

*செயற்குஅரிய யாவுள நட்பின் அதுபோல்*
*வினைக்குஅரிய யாவுள காப்பு.* (781)

நட்புச் செய்து கொள்ளுதல் போல் செயற்கரிய செயல் யாதுளது? ஒருவர் செய்யும் காரியங்களுக்கு நட்பைப் போல் வேறு காப்பு ஏது?

அரியவற்றுள் அரியது சிறந்த நட்பைப் பெறுதல், நட்புச் செய்தல்.

ஒருவர் செய்யும் பணிகளுக்குப் பாதுகாப்பு தருபவர்கள், சிறந்த நண்பர்கள் என்பது கருத்து.

*நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்*
*பின்நீர் பேதையார் நட்பு.* (782)

நல்லவர்கள் நட்பு, பிறை நிலா வளர்ந்து முழுமையாதல் போன்ற தன்மையுடையது. அறிவில்லாதவர் நட்பு முழுநிலா தேய்தல் போன்ற தன்மையுடையது.

*நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்*
*பண்புடை யாளர் தொடர்பு.* (783)

மற்றவர்க்கு எடுத்துக் கூறும் பொழுதெல்லாம் நூல்களின் திறமும் இனிமையும் வெளிப்படுவது போல், பண்புடையார் தொடர்பு பழகுந்தொறும் இன்பம் மிகுவதாகும்.

நூற்பயிற்சியிலும், பழகும் நட்பிலும் இடையீடு இருத்தல் கூடாதென்பது உணர்த்தியது.

"நவில்தொறும்" என்பதற்குப் பயில்தொறும் என்று பொருள் கூறுதல் தவறன்று. ஆனாலும் சிறப்பன்று.

*நகுதல் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்*
*மேற்சென்று இடித்தல் பொருட்டு.* (784)

ஒருவரோடொருவர் நகைத்து விளையாடுதல் பொருட்டல்ல, நட்புச் செய்தல். பழகும் நண்பர் பொருந்தாச் செய்கையில் ஈடுபடும்பொழுது இடித்துக் கூறித் திருத்தலுக்கும் நட்பு பயன்பட வேண்டும்.

*புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்*
*நட்பாம் கிழமை தரும்.* (785)

ஒருவரோடொருவர் நட்பாயிருத்தலுக்கு நெருங்கியிருந்து உண்பதும் உரையாடலுமாகிய புணர்ச்சி வேண்டற்பாற்றன்று. அகநிலை உணர்வினாலேயே நட்பின் உரிமையை வளர்த்துப் பாதுகாக்க இயலும்.

உணர்ச்சி வழி நட்பைப் பாதுகாத்தல் முறைகளாவன :

நாள்தோறும் எண்ணுதல், எண்ணி மகிழ்தல், நல்லன நடக்க எண்ணுதல் ஆகியன.

*முகநக நட்பது நட்புஅன்று நெஞ்சத்து*
*அகநக நட்பது நட்பு.* (786)

கண்டவழி முகமலர்ச்சியைக் காட்டுவது மட்டும் நட்பன்று. நெஞ்சத்தில் நினைத்து நட்புச் செய்தலே நட்பு.

முன்னே முகமன் காட்டியும், கூறியும் நெஞ்சத்தில் நினைவிலாது நட்புச் செய்தலே நட்பு.

சிலர் முகத்தின் முன்னே மலர்ச்சியையும், பின்னே இகழ்ச்சியையும் காட்டுவர். இவர்கள் நட்புக்கு ஆகார்.

*அழிவின் அவைநீக்கி ஆறுஉய்த்து அழிவின்கண்*
*அல்லல் உழப்பதாம் நட்பு.* (787)

அழிவு தரும் செயல்கள் படரும் பொழுது அவற்றைத் தடுத்து நிறுத்தி விலக்கிப் பாதுகாத்தலும், மீண்டும் அழிவு வழியில் செல்லாதிருக்க நன்னெறியில் நடக்குமாறு செய்தலும், ஆளுமை

எல்லைகளைக் கடந்து அழிவு வருமாயின் உடனிருந்து அனுபவித்தலும் நட்பின் இலக்கணம்.

"அழிவினவை நீக்கி" என்பதற்குத் தாமே அழிவிலிருந்தும் பாதுகாத்தல் என்றும் கொள்ளலாம்.

நண்பன் அல்லலின் வயப்பட்டு உழல நேரின் அவனுடனேயே உழலுதல் நல்ல நட்பிற்குச் சான்று.

*உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே*
*இடுக்கண் களைவதாம் நட்பு.* (788)

இடையிலுள்ள ஆடை இழந்தபோது, கை உடன் அந்த ஆடையை எடுத்துத் தந்து உதவுவது போல, நண்பனின் துன்பங்களைக் களைவதே நட்பு.

"உடுக்கை இழந்தவன் கை போல" என்றிருப்பதால் இடையில் உள்ள ஆடை இழிந்து விழுந்து விட்டபோது கை, மெய்யது பொத்தி மானத்தைக் காப்பாற்றுதல் போல என்று கூறுவது சிறப்புடைய பொருளாகும்.

*நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்பின்றி*
*ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.* (779)

நட்பிற்குரிய சிறப்பு யாதெனில், எஞ்ஞான்றும் மாறுபாடின்றி இயன்றவாறெல்லாம் அறம், பொருள், இன்பச் செயற்பாடுகளில் தளராமல் தாங்குதலாம்.

"வீற்றிருக்கை" வாழ்க்கையில் சிறந்ததோர் இடம்.

*இனையர் இவரெமக்கு இன்னம்யாம் என்று*
*புனையினும் புல்லென்னும் நட்பு.* (790)

இவர் நமக்கு இத்துணையன்பினர், யாம் இவர்கட்கு இன்ன தன்மையான நட்பியல்புடையேம் என்றெல்லாம் கூறினும் நட்பு அற்பமயமானதாகத் தோன்றும்.

நயந்து பயிலும் நட்புப் பாராட்டுத்லை விரும்பாது பழகுதலே பெரும்பேறு.

திருக்குறள் விலக்கிய இந்த நட்பு முறையே இன்று பரவி வருகிறது. இதனால் நட்புக் கெடும்; பகைவர்கள் தோன்றுவர்.

*(தொடரும்)*

# அருட்திரு பாம்பன் சுவாமிகள் அருளிய திருக்குன்றக்குடிப்பதிகம்

## உரை விளக்கம்

(சைவத்தமிழ்மணி.வித்துவான். க. கதிரேசன்)
(குன்றக்குடி ஆதீனப் புலவர்)

*பூமுடி விண்ணவர் வாழ்வும் பூதல மன்னவர் வாழ்வும்*
*தூமுடி நாகர்கள் வாழ்வும் சுந்தர நின்அடி யார்கள்*
*தாமுறு வாழ்வினுக் கேஓர் சற்றும்நே ராகுமோ நாகர்*
*கோமுனி வோர்தொழும் கோவே குன்றக் குடிஉறை தேவே.*

**கூட்டுமுறை :**

சுந்தர, நாகர்..... தேவே; பூமுடி..... நேராகுமோ? என்னையும் உன் அடியாராக ஏற்று அருள்க என்று வருவித்துக் கூட்டிமுடிக்க.

**குறிப்புரை :**

சுந்தர=அழகே வடிவானவனே. நாகர்= பாதாள உலகினர். கோ = தலைமை சான்ற. கோவே = அண்டங்களுக்கெல்லாம் பேரரசனே. தேவே = தெய்வமே. பூமுடி = வேள்வி நெருப்புப் போன்ற செந்நிறத் தலைமுடி. (பூ - வேள்வி நெருப்பு) பூதலம் = பொலிவு சான்ற இவ்வுலகம்.

**பொழிப்புரை :**

அழகே வடிவானவனே; பாதாள உலகினரும் தலைமை சான்ற முனிவர்களும் தொழும் அண்டங்களுக்கெல்லாம் பேரரசனே; குன்றக்குடியில் எழுந்தருளி அருள்பாலிக்கும் தெய்வமே; வேள்வி நெருப்புப் போன்ற செந்நிறத்தலை முடியுடைய தேவர்கள் வாழ்வும், பொலிவு சான்ற இந்நிலவுலக மன்னர்கள் வாழ்வும், தூய முடியுடைய பாதாள உலகினர் வாழ்வும் உன் அடியார்கள் பெறும் பெருவாழ்வினுக்கு ஒரு சிறிதாவது ஒப்பாகுமோ? ஒப்பாகாது. என்னையும் உன் அடியானாக ஏற்று எனக்கும் அவ்வாழ்வு அருள்க.

**விளக்கம்**

குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் கைபுனைந்து இயற்றாக்கலின்பெறுவனப்பன். "சுக்குக்கு விஞ்சிய மருந்தில்லை சுப்பிரமணியனுக்கு விஞ்சிய தெய்வமில்லை" என்பது பழமொழி. இதற்கேற்ப உயிர்க்குல மலநோய் தீர்த்து நலமேயான சுந்தரத்தை அவற்றுக்கு அருள் இறைவன் ஆதலின் அவனைச் "சுந்தர" என்று விளித்தார்.

யான் எனது என்னும் செருக்கினை முனிந்து எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் இயல்பினால் என்கடன் பணிசெய்து

கிடப்பதே என்ற அருள்பழுத்த பெருவாழ்வினராதலின் முனிவோர், "கோ" என்ற அடைமொழி பெற்றனர்.

முனிவர் தொழுதலாவது மனம் வாக்கு காயத்தால் அவன் பணியே பற்றி ஒழுகுதல்.

தன் அருள்வெளிக்குள்ளே அகிலாண்ட கோடி எல்லாம் தங்கும் படிக்கு இச்சைவைத்து உயிர்க்குயிராய்த் தழைத்தவன் பெருமான். இவன் உயிர்க்குலத்துக்கு இம்மை நலங்கள் வழங்குவது பற்றி இவனைக் "கோவே" என்றும் மறுமையில் வீட்டின்பம் நல்குவது பற்றித் "தேவே" என்றும் இப்பதிகம் பாக்கள் தோறும் மகுடம் அமைத்துள்ள சிறப்பு கண்டு மகிழ்க.

விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும் உண்ணாத நஞ்சு உண்டு இருந்து அருள்புரிந்த சிவம் இவனேயாதலின் அருட்டிரு குமரகுருபர அடிகள் இவனைச் "செத்துப்பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள" என்ற தொடரை மகுடமாக வைத்துத் தமது முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழில் போற்றுகிறார். "செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள்" என்ற தொடர் இந்திரன் முதலிய பதத்தினரைக் குறிப்பது. மணம் = நன்னிலை - பதவி. இவர்களின் இப்பதவிகளைத் தானே ஒருசேர ஆள்கின்றவன் ஆதலின் இவனைத் "தேவே" என்று விளித்தார். இவன் "சிவபெருமானே" என்பதை அடிகளின் பத்தாம் திருப்பாடலில் காண்க.

மனிதர்க்கும் விண்ணவர்க்கும் உள்ள உடம்பு வேறுபாடுகள் பலவற்றுள் ஒன்று, அவர்தம் தலைமுடி நமது கருமுடிபோலன்றிச் செம்மை நிற ஒளி வீசுவது என்பது நம் இலக்கிய மரபு. இதுபற்றி அடிகள் விண்ணவர் தலைமுடியின் செந்நிற ஒளிக்கு, வேள்வி நெருப்பின் செந்நிற ஒளியை உவமை கூறினார்.

"வளிவழங்கும் மல்லல் மாஞாலம்" (காற்று இயங்குகிற வளப்பம் வாய்ந்த இவ்வுலகம்) என்ற பொய்யா மொழியையும், பிற உலகங்களில் யாதொன்றும் உயிரின நல்வாழ்வுக்குரியதாக இதுவரை காணப்பெற வில்லை" என்ற விண்வெளி விஞ்ஞானியரின் கருத்தையும் உட்கொண்டது "பூதலம்" என்ற தொடர்க்குரிய பொருள்.

"நேராகுமோ?" என்றாலே நேராகாது என்ற பொருள் தருமாயினும் "ஓர் சற்றும்" என்ற அடையால் ஒருசிறிதளவுகூட நேராகாது என்று வலியுறுத்தினார்.

யான் எனது என்ற இருபற்றுடைமையும், எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூணாத் தன்னலவாழ்வும் செத்துப் பிறத்தலும் முதலியன உடையவர்கள் விண்ணவரும் பூதலமன்னவரும் நாகரும் ஆதலின் இவற்றுள் ஏதுமில்லா அடியார் அருள்வாழ்வுக்கு முற்கூறியோர் வாழ்வு "ஓர்சற்றும் நேராகாது"எனப்பெற்றது.

(தொடரும்)

# அருளாலய அணு ஒப்பந்தம்

தமிழாகரர். தெ. முருகசாமி

இன்றைய நாளில் இந்திய நாட்டில்
ஒன்றைப் பலரும் பலவித மாகப்
பேசும் படியாய் உள்ள தியாதெனில்
வீசும் அணுவின் வியத்தகு சக்தித்
திறனைப் பற்றித் திரும்பத் திரும்ப
மறவா வாறு மாநில மத்திய
அரசியல் கட்சிகள் ஆலோ சனையை
உரச லோடே ஒவ்வொரு நாளாய்
வாய்திறந் தேதான் கொட்டும் தேள்போல்
காய்த்த மரத்தின் கல்லடி போலவும்
பேசிப் பேசி முடிவுகா ணாமல்
பாசி வழுக்கலாய் விழுந்தெழுந் தேதான்
அடிபடா வாறாய் அறிவு பூர்வமாய்
இடிபா டுடனே இதய வெடிப்பாய்
தந்து வருகையில், தயக்கந் தானே
வந்தது நெஞ்சில்! வசந்தத் தமிழில்
பாவேந் தர்தான் பாரதி தன்னைப்
பார்த்தசந் திப்பில் பாடிய அந்த
"எங்கெங்குக் காணினும் சக்தியடா" என்ற,
பொங்கிய பாட்டின் பொருளை எண்ணினேன்!
இயற்கை சக்தியின் ஏற்றந் தன்னைச்
செயற்கையால் அளக்க ஒண்ணா தென்று
வியக்க வியக்க விண்ணை முட்டும்
மயக்கந் தானே மதியைக் கவ்வ
உறக்கங் கொண்டேன்! ஒட்டுத் துணிகளைச்
சிறக்க வைத்துத் தைத்தசீ ருடைபோல்
நாட்டில் உள்ள நலமுறு கட்சிகள்
கூட்டாய் உரைத்த குரலைக் கேட்டேன்!
"ஏகாதி பத்திய எடுபிடி யாக

ஆகா தோதான் இவ்வணு சக்தி
ஒப்பந் தத்தால்" என்றதன் உண்மையைச்
செப்பிய அளவில் சிந்தை செய்தேன்!
ஒட்டுத் துணியின் ஒய்யா ரம்போல்
கட்டுக் கோப்பாய்க் கட்சிகள் யாவும்
நாட்டுப் பற்றுடன் கூறிய தாக
வாட்ட மின்றி நினைத்திட் டாலும்
நீண்ட ஐயம் நெஞ்சை வருட
மூண்ட கருத்தை முன்வைக் கின்றேன்!
"ஆளு வோர்க்குச் சிக்கல் தன்னை
நாளும் தந்தால், நழுவிடும் ஆட்சி,
பிடித்துக் கொளலாம் உடனே" என்று
நடித்து நயவஞ் சகமாய்த் தானும்
எதிர்ப்பை அந்தோ இதமாய்க் காட்ட
உதிர்க்கின் றாரோ வார்த்தையை? அன்றி
முயலின் வேகமாய் வளரும் நாம்தான்
அயல்நாட் டார்க்கே அடிமை யாகிச்
செயலிழந் தேதான் செத்து மடியும்
மயலாய் மயங்கும் மயக்கில், முன்பு
பாடு பட்ட சுதந்திரந் தன்னை
நாடிழந் திடுமோ? என்றெலாம் கூறும்
இதற்கொரு தீர்வு யாரென எண்ணிப்
பதற்றத் துடனே படுத்திருக் கையிலே
"அனைத்தையும் அழிக்கும் அணுகுண் டைத்தான்
திணைத்துணை யளவும் வெடித்துச் சோதனை
செய்யமாட்டோம், என்ற உறுதியைச்
செய்து கொண்டால் தீரும் சிக்கல்"
என்றெணும் என்முன் தோன்றிய ஒருவர்
"நன்றிம் முடிவு என்றா லும்மே
அணுவைப் பற்றி அரசிய லாரினும்
அணுஅணு வாக முற்றிலும் அறிந்தவர்

அணுவிஞ் ஞானிகள் என்பதால் இந்த
அணுஒப் பந்தத் தன்மை பற்றி
அவர்கள் கூடி ஆலோ சித்துத்
தவறு சரியெனத் தக்க முடிவைத்
தந்த பின்னர் ஏற்போம்! அதுவே
எந்த ஏச்சுப் பேச்சுக் கிடமிலா
முடிவாய் இருக்கும், என்றார் தம்மின்
படியில் பாதம் படியார் தமது
உருவை நாடி உருண்டேன்! புரண்டேன்!
அருளுரு வான தமிழ்மா முனிவர்
"அறிக அறிவியல்" என்ற குரலை
உறியின் நெய்போல் உருக்கமாய்ச் சொன்னதும்
திடுக்கிட் டெழுந்தேன்! குன்றக் குடியின்
"ஒடுக்கசந் நிதி"யாம் அருளா லயத்தே!

---

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

– ஆசிரியர்

# அர்ச்சகரும் சாதியும்

## (ஆ. சிவசுப்பிரமணியன்)

தமிழ்நாட்டின் சைவ, வைணவக் கோவில்களின் அர்ச்சகர்கள் பரம்பரை அடிப்படையிலேயே நியமிக்கப்பட்டுவருகின்றனர். இங்கு பரம்பரை என்பது குடும்பப் பரம்பரையை மட்டுமின்றி சாதியப் பரம்பரையையும் சார்ந்தே நிற்கிறது. தாழ்த்தப்பட்ட மற்றும் பிற்படுத்தப்பட்ட சாதியினரின் முன்னேற்றம் குறித்து ஆய்வு செய்யக் குழு ஒன்று 1969 ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்டது. இக்குழுவின் பரிந்துரைகளில், தேவையான கல்வித் தகுதி உடையவர்களுக்குப் பயிற்சி அளித்து அவர்களில் தகுதியானவரைக் கோவில் அர்ச்சகராக நியமிக்கலாம் என்பது ஒன்று.

இதை ஏற்றுக்கொண்ட அன்றைய திமுக அரசு இதை நிறைவேற்றும் வகையில் 1971ஆம் ஆண்டில் சட்டத்திருத்தம் ஒன்றைக் கொண்டு வந்தது. இத்திருத்தத்தின்படி பரம்பரை என்ற பெயரில், குறிப்பிட்ட சாதியினரே அர்ச்சகராகவும், பூசகராகவும் வருவதற்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

இம்முற்போக்கான சட்டத் திருத்தத்தை எதிர்த்து, பத்து அர்ச்சகர்களும், இரண்டு மடாதிபதிகளும் உச்சநீதிமன்றத்தில் ரிட் மனு தாக்கல் செய்தனர். இம்மனுக்களைத் தள்ளுபடி செய்து தீர்ப்பளித்த உச்சநீதிமன்றம் தன் தீர்ப்பில் இறுதியில் –

"புனிதம் கெடுவதற்கான காரணங்கள், பிரம புராணத்தில் உள்ளன. அவை, திருவுருவம் உடைதல், தூளாகப் போதல், தீபடுதல், ஆதாரப் பீடத்திலிருந்து அகற்றப்படுதல், கழுதை முதலான பிராணிகள் தீண்டுதல், பிற தெய்வ மந்திரங்களால் வழிபடுதல், ஜாதி பிரஷ்டர் தொடுதல் ஆகியவை. இக்கருத்துகளெல்லாம் சமய நடைமுறைக்குரியவை. அன்றியும் ஏனையோர் எவ்வளவு உயர்ந்த சமூக நிலையில் ஆச்சாரியராகவோ, மடாதிபதியாகவோ இருந்தாலும் வேறு பிராமணராக இருந்தாலும் திருவுருவத்தைத் தீண்டவோ பூசை செய்யவோ அருகதையுடையவர் அல்லர். இது சைவம், வைணவம் இரண்டுக்கும் பொது விதி. கோயில் பூசகர் தெய்வ வழிபாட்டில் எவ்வளவு வல்லவராயிருந்தாலும்கூட ஆகமங்களின்படி குறித்த இனத்தைச் சேர்ந்தவராகத்தான் இருத்தல் வேண்டும். புனிதம்

கெடலாகாது என்பது சமய உணர்வின் சாரம். ஆகவே ஆகமங்களின்படி அதிகாரமுடைய இனம் அல்லாத ஒருவர், திருவுருவத்தைத் தீண்டுவது முதலிய காரியங்கள் செய்ய அரசு அனுமதிக்குமானால், அச்செயல் இந்துக்களின் சமய உணர்வில் தலையிடுவது ஆகும். அச்செய்கை அரசியலமைப்புச் சட்டத்தின் 25 (1) ஆவது பிரிவின்படி, வெளிப்படையாகவே செல்லத் தகாதது ஆகும்.

என்று குறிப்பிட்டது. பூசை செய்ய விதிக்கப்பட்ட சாதியினர் தவிர ஏனைய சாதியினர், கருவறையில் உள்ள சிலையைத் தொடுவதும், கழுதை முதலான பிராணிகள் தொடுவதும் ஒன்றுதான் என்ற பிரமபுராணக் கருத்தை உச்சநீதிமன்றமே ஏற்றுக் கொண்டுவிட்டது. இதனால் தமிழ்நாடு அரசின் சட்டத் திருத்தத்தை நடைமுறைப்படுத்த முடியாமல் போய்விட்டது. (ஏறத்தாழ ஓராண்டுக்கு முன்னர் கேரளத்தில் தலித்துகள் அர்ச்சகர்களாகப் பணியாற்றுவதற்கு ஆதரவாக உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளது)

இத்தகைய சூழலில் 1971ல் அனைத்து சாதியினரும் அர்ச்சகராகப் பணிபுரியலாம் என்ற சட்டத் திருத்தத்தைக் கொண்டுவந்த தி.மு.க. அரசு, தற்போது மீண்டும் அனைத்து சாதியினரும் அர்ச்சகராகும் முடிவை நிறைவேற்றத் துணிந்துள்ளது.

இதனடிப்படையில் திருவள்ளூர் மாவட்டம் பேரம்பாக்கத்தில் உள்ள நரசிம்மசுவாமி கோயிலில் பிராமணர் அல்லாத இருவரை அர்ச்சகராக நியமித்து உத்தரவிட்டுள்ளது. நாளொன்றுக்குப் பதினைந்து ரூபாய் ஊதியத்தில் நியமிக்கப்பட்ட இவ்விருவரின் நியமனத்தையும் எதிர்த்து ஸ்ரீ லட்சுமி நரசிம்ம சுவாமி சேவா சபா அறக்கட்டளையின் நிர்வாக அறங்காவலர் எஸ்.எஸ்.நந்தகோபால் வழக்குத் தொடர்ந்துள்ளார்.

ஒரு சிறு சமூக மாற்றத்தைக்கூட இவர்களால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அரசு தரப்பில் வாதாடியுள்ள வழக்குரைஞர், இரு அர்ச்சகர்களை நியமிக்கும் உத்தரவை அறநிலையத்துறை நிறுத்தி வைத்திருப்பதாக நீதிமன்றத்தில் குறிப்பிட்டுள்ளார்.

ஓய்வுபெற்ற உச்சநீதிமன்ற நீதிபதி எஸ்.மகாராஜன் தலைமையில், "தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் அர்ச்சகர் நியமனமுறை" பற்றி ஆராய்வதற்காக வல்லுநர் குழு ஒன்றை, 1979ஆம் ஆண்டில் தமிழ்நாடு அரசு நியமித்தது. இக்குழுவின் அறிக்கை 1982ஆம் ஆண்டில் வெளியாகியுள்ளது.

இக்குழுவின் அறிக்கையில் "சிவாச்சாரியரும் சுமார்த்தப் பிராமணரும்" என்ற தலைப்பில் குறிப்பிட்டுள்ள செய்திகள் வருமாறு;

"சிவாச்சாரியர் அல்லது சிவத்துவிஜர் அல்லது ஆதிசைவர் என்போர் சுமார்த்தப் பிராமணர் அல்லர். அவர்கள் சிவப்பிராணமர் என்று ஆகமங்களில் சொல்லப்பட்டுள்ளது. ஆதிசைவராகிய சிவப்பிராமணர்கள் அனாதி சைவர் என்று சொல்லப்பட்ட சிவபெருமானுடைய ஐந்து முகங்களிலிருந்து தோன்றி, சிவபிரானையே வழிபடுகிறவர் என்றும் சுமார்த்தப் பிராமணர் பிரம்மாவினுடைய நான்கு முகங்களிலிருந்து தோன்றி பிர்மத்தையே வழிபடுகிறவர்கள் என்றும் சிவ சிருஷ்டியின்பாற்பட்ட சிவப்பிராமணர் அல்லாமல், பிரமசிருஷ்டியில் தோன்றிய சுமார்த்தப் பிராமணர் சிவாலயங்களில் பூசை செய்யத் தகுதியற்றவர்கள் என்றும் ஆகமங்களில் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது. எனவே சிவாலயங்களில் பரார்த்த பூசை ஆதிசைவர்களாகிய சிவாச்சாரியார் தவிர, இதர பிராமணர் செய்யக் கூடாது" என ஆகமங்களில் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது. எனவே சிவாலயங்களில் பரார்த்த பூசை ஆதிசைவர்களாகிய சிவாச்சாரியர் தவிர, இதர பிராமணர் செய்யக்கூடாது என ஆகமங்களில் விதிக்கப்பட்டுள்ளதாகக் குறிப்பிட்டுள்ளதுடன், ஏனையோர் அர்ச்சகராகப் பணியாற்றினால் அரசனுக்கும் அவனால் காக்கப்படும் நாட்டிற்கும் உடனே கேடு சூழும் என்று "காமிகாகமம்" கூறுவதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

மேலும் மகாராஜன் குழு, தன் அறிக்கையில், சைவ, வைணவ ஆலயங்களில் எவ்வாறு ஆகம விதிகள் மீறப்பட்டிருக்கின்றன என்று குறிப்பிட்டுள்ளது. அவற்றுள் சில வருமாறு: ஆகமங்களில் ஆச்சார்ய லட்சணம் என்பதாகச் சொல்லப்பட்ட தகுதிகளுக்கு உட்பட்டு சிவாலயங்களில் சிவாச்சாரியர்களும், வைணவ ஆலயங்களில் பட்டாச்சாரியர்களும் பூசை செய்ய வேண்டும் என்பது வடமொழி ஆகம விதி.

அன்றியும் சிறப்பான பல சிவாலயங்களில் சிவாச்சாரியார் அல்லாத சுமார்த்த பிராமணர் பூசை நடைபெறுகிறது. உதாரணம் சிதம்பரம், ராமேசுவரம், திருவீழிமலை, கன்னியாகுமரி, திருவானைக்காவல், திருச்செந்தூர். ஆதலால் சிவாச்சாரியர் மட்டுமே பூசை செய்ய வேண்டும் என்ற விதிக்கு மாறான நிலை தொன்றுதொட்டே இருந்து வருகிறது.

கருவறைக்குள் சிவாச்சாரியர் அல்லாத பிறர் புகுந்தாலும் திருவுருவத்தைத் தொட்டாலும் மூர்த்தியின் புனிதம் கெடும் என்று ஆகமங்களில் சொல்லப்பட்டுள்ளது. இதற்கு மாறாகப் பல கோயில்களில் பணிகள் நடைபெறுகின்றன. தொன்மையான பல சிவாலயங்களில் சுமார்த்தப் பிராமணர், அபிடேக தீர்த்தம் செய்தல் நைவேத்தியப் பாகம் செய்து கருவறைக்குள் கொண்டுவந்து தருதல் கருவறைக்குள் திருவிளக்கு இடுதல் முதலான பணிகளைச் செய்கிறார். இவ்வளவும் ஆமக விதிகளுக்கு மாறானவை.

பூசகர் ஊதியம் பெறுவது கூடாது. அதனால் தேவல கத்துவதோஷம் வரும், ஆலயத்தின் புனிதம் கெடும் என்று ஆகமங்கள் விதித்திருக்க (காரணாகமம், பூர்வபாகம், புண்ணியாபிஷேக விதிப்படலம், பக்கம் 309) பெரும்பான்மையான பெருங்கோயில்களில் கூட பூசை செய்யும் பூசகர் மாதச் சம்பளமே பெற்று வருகிறார்.

மனைவியில்லாதவர் (அபத்நிகன்), பிரம்மச்சாரி ஆகியோர் நைமித்திகம் முதலான பூசை செய்யக்கூடாது என்பது ஆகம விதி. ஆனால் இவர்க்ளும், இன்று பல முரணான உடல் குறைபாடு உடையவர்களும் பூசை செய்கிறார்கள்.

சுமார்த்தப் பிராமணர் பூசை செய்யும்போது அவர்கள் வைதீகப் பூசை என்கிறார்கள். அதாவது தாங்கள் போதாயன சூத்திரம் ஆபஸ்தம்ப சூத்திரம் ஆகியவற்றின்படி பூசை செய்து வருவதாகச் சொல்கிறார்கள். அந்த இடங்களில் பிரதிட்டை முதலான கிரியைகள் ஆகமப்படி நடந்திருக்கும்போது இந்தச் சூத்திரங்களின்படி பூசை செய்வது ஆகம விதிகளுக்கு மாறு. இங்கெல்லாம் ஏதோ ஒரு காலத்தில் அரசியல் சூழ்நிலையில் ஏற்பட்ட தவறு பழக்க வழக்கமாகியிருக்கிறது.

பொதுவாக எல்லாக் கோயில்களிலும் அக்கினி மூலையில் மடைப்பள்ளி அமைந்திருக்கும். அங்கு சிவாச்சாரியாரே நிவேதனம் தயாரித்துக் கொண்டு வந்து நிவேதிக்க வேண்டும் என்பது ஆகமவிதி. ஆனால் இப்போது பெருங்கோயில்களில் மடைப்பள்ளியில் தீட்சைகூட இல்லாத ஒரு சுமார்த்தப் பிராமணர், பரிசாரகர் என்ற பெயரில் அன்னம் சமைத்து வந்து நிவேதனமாகத் தருகிறார். இதைத்தான் சிவாச்சாரியார் பெற்று நிவேதிக்கிறார். முன்னமே காட்டியபடி ஐந்து பிரிவான சிவாச்சாரியார்களுள் பாசகர் என்ற பிரிவுக்குரிய சிவாச்சாரியார் நிவேதனம் தயாரிக்க வேண்டும்.

சில பெருங்கோயில்களில்கூட மடைப்பள்ளியிருந்தும், அங்கு சமைக்காமல் சிவாச்சாரியார் தம் வீட்டிலேயே சமைத்துக்கொண்டு வந்து நிவேதனம் செய்கிறார்.

மேற்கூறிய செய்திகள் அடிப்படையில் நோக்கினால் நடைமுறையில் ஆகம மீறல்கள் சைவ, வைணவ கோயில்களில் உள்ளமை வெளிப்படுகிறது.

இந்து சமய அறநிலை ஆணையம் மத்திய அரசிடம் வழங்கிய அறிக்கையில் (1960-62 சர்.சி.பிராமசாமிஐயர், அர்ச்சகர்கள் குறித்துக் குறிப்பிட்டுள்ள கருத்து வருமாறு :

"அர்ச்சகர்களும் பூசாரிகளும் எழுத்து வாசனை அற்வர்கள், அல்லது அரைகுறைப் படிப்பேயுள்ளவர்கள். அன்றியும் இவர் பணம் பறிக்கும் நோக்கமே கொண்டிருந்தார்கள். மந்திரங்களை இவர்கள் உச்சரிக்கின்ற முறையும் சுரந் தவறிச் சொல்லும் முறையும் கேட்போர் மனதில் பிழைபடவும், விருப்பம் உண்டாக்காமலும் இருந்தன. இதில் மிகவும் நொந்துகொள்ள வேண்டிய தன்மை என்னவென்றால், இவர்களுக்குத் தாங்கள் சொல்லுவதன் பொருளோ, கருத்தோ கொஞ்சமும் தெரியாது. இதனால் தெய்வ அருள் வேண்டிக் கோயிலுக்கு வரும் சேவார்த்திகள் மற்றும் பக்தகோடிகளிடத்தில் பக்தியுணர்வையும் தெய்வ உணர்வையும் இவர்களால் ஊட்ட முடிவதில்லை என்பது தெளிவு".

ஆனால் இத்தகைய ஆகம மீறல்களினால் ஆதாயம் பெறுவோர் இவற்றை மட்டும் கண்டுகொள்வதில்லை. ஏனெனில் இவர்கள் உண்மையிலேயே ஆகமவிதி முறைகள் பற்றிக் கவலைப்படவில்லை. வருணதர்மம் பற்றியே கவலைப்படுகிறார்கள். இதை வெளிப்படையாகச் சொல்லாமல் ஆகம விதிகளுக்குப் பின்னால் மறைந்து கொள்ளுகிறார்கள்.

தமிழ்நாட்டின் மொத்த மக்கள் தொகையில் ஒரு பெரும் பிரிவினரான தலித் மக்களை ஆகம விதிகளைக் காரணம் காட்டியே ஆலயத்திற்குள் நுழைய அனுமதிக்காதிருந்தார்கள். ஆனால் சட்டத் திருத்தத்தின் மூலம் இத்தடை நீக்கப்பட்டது போல், அனைத்துச் சாதியினரும் அர்ச்சகராவதற்கு இடையூறாகவுள்ள தடைகள் சட்டத்தின் துணையுடன் நீக்கப்பட வேண்டும். இதற்கு முற்போக்கு சக்திகள் குரல் கொடுக்க வேண்டும்.

- (நன்றி : "ஜனசக்தி" 13.7.2007)

# பொல்லா உலகம்

(முனைவர்.கடவூர் **மணிமாறன்**)

பொல்லா உலகம்! போக்கிலிக் கூட்டம்
எல்லாம் நடத்தும்! எண்ணிய முடிக்கும்!
நல்லோர் உள்ளம் நைந்து துடிக்கும்;
அல்வழி செல்வோர் அனைத்திலும் மேனிலை
எய்தும் வாய்ப்போ எளிதாய்ப் பெறுவர்!
செய்வன யாவிலும் சிறுமை விதைப்போர்
எப்பழிவரினும் ஏற்றிடத் தயங்கார்!
ஒப்பனைக் கூத்துகள் ஊரைத் திரட்டும்!
பிறரின் உயர்வில் பெரிதும் புழுங்குவர்!
திறமை மதிக்கத் தெரியார்! நாளும்
வாயில் பந்தல் வனப்புறப் போடுவர்!
காயினைப் பறிப்பர்! கனியை வெறுப்பர்!
பொறுப்பில் லாமல் புலம்பித் திரிவர்!
வெறுப்பைத் தேடி விளைச்சல் காண்பர்!
காசுக் காகக் கண்டதைச் செய்வர்!
மாசு வரினும் மானம் போயினும்
சிறிதும் கவலார்! சிந்தனை செய்யார்!
முறியும் அன்பால் முகம்சுளித் தாலும்
பொருட்படுத் தாமல் போலியாய் நகைப்பர்!
திருட்டு மாந்தர் தெருவில் வலம்வர
அறநெறி யாளர் அஞ்சிக் கிடப்பர்!
உறவோர் தென்படின் ஒதுங்கிக் கொள்வர்!
வம்பு வழக்குகள் வலிந்து செய்வோர்
நம்பிக் கழுத்தை அறுப்போர் நாட்டில்
பல்கினர்! வாழ்வில் பன்னரும் துன்பம்
மல்கிட ஒருநாள் மனமும் திருந்துவர்!
நீளும் நாக்கால் நிழற்போர் நடத்தி
வாழும் கலையில் வாகை சூடும்
அறிவிலி மாந்தர் அழிவை எய்திடின்
நெறிகள் பிழைக்கும்! நீணிலம் உய்யுமே!

●●

# ஜீவாவின் பாதையில் மானுடம் பயணம் செய்யட்டும்

## (தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்)

(12.05.2007) சனிக்கிழமை மாலை 6 மணியளவில் சிங்கம்புணரி நகர்மன்றத்தில் தொடரும் குழுவினர் நடத்திய ஜீவா நூற்றாண்டுவிழாவில். "ஜெயகாந்தன் பேட்டிகள்" என்ற நூலை வெளியிட்டும், தமிழ் இலக்கியப் பணியாற்றிவரும் அன்பர்களைப் பாராட்டியும் அடிகள்பெருமான் ஆற்றிய தலைமை உரை)

இன்றைய சமூகத்தின் பயணம் எங்கே சென்று கொண்டிருக்கிறது? பல வினாக்களை இன்றைய சமூகம் எழுப்பிக் கொண்டிருக்கிறது. நெருஞ்சிகள் பூக்கிற நிலத்தில் குறிஞ்சிகள் பூக்கிற சிறப்பைப் பெற்ற இயற்கை வளமுடைய, மனித வளமும், சமூக நலமும், கல்வி வளமும் ஒரு நாட்டை உயர்த்த வேண்டும் என்ற லட்சியத்தில் பயணம் செய்வதில் என்றைக்கும் குறைவில்லாத மண். இந்த மண்ணிலேதான் ரத்தமும் சதையுமாக உயிரோடு ஒரு மனிதன் நம்மிடையே உலாவியிருக்கிறான். இப்படியும் அவன் சுவாசக்காற்று இந்த மண்ணை நலப்படுத்தியிருக்கிறதா? வளப்படுத்தியிருக்கிறதா? என்று சிந்திக்கக்கூடிய நிலையில்தான் நம் அன்புக்குரிய அமரர் ஜீவா அவர்களை நினைவுகூர வேண்டியவர்களாக இருக்கிறோம். அருமையாய்த் தோழர் மகேந்திரன் குறிப்பிட்டார். இன்றெல்லாம் அரங்கங்கள் உண்டு. பேசுவதற்கு ஒலிபெருக்கிகள் உண்டு. ஒலிபெருக்கியில் உரக்கக் கத்தினாலும் சின்னத் தொலைபேசிகள் நம் செவிகளை அடைத்துக் கொண்டிருக்கின்றன. ஆனால் தான் வாழும் காலத்தில் ஒலிபெருக்கியே இல்லாமல் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடியிருக்கிற அரங்கத்தில் உரக்க உரக்கக் கூவி அதனால் தன் செவிகளையே இழந்துவிட்ட மகத்தான சமூக சிந்தனையாளர்தான் ஜீவா.

இந்த மண்ணிற்கு மகாத்மா காந்தி வருகிறார். எங்கே வந்தார்? யாரைப் பார்க்க வந்தார்? குன்றக்குடிக்கு அருகே இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது சிராவயல் கிராமம். இப்பொழுது அந்தக் கிராமம் பெருமைப்படுவதே ஜீவாவின் பெயரை உச்சரிப்பதால். ஒரு மனிதன் சில காலம் நிழலாய் அங்கே இருந்தான்; அந்த நிழலிலே வாழ்ந்தான்; அந்தக் காற்றைச் சுவாசித்தான்; நீரைப் பருகினான் என்பதற்காக ஒரு ஊர் பெருமை கொள்கிறது. குன்றக்குடிக்கு அருகே அந்தச் சிராவயல் கிராமம். அங்கேதான் மனித ஆத்மாக்களின் நடுவே இருந்த மகாத்மா, ஜீவா என்கிற மகத்தான மனிதப் புனிதரைச் சந்திக்கிறார். அந்தச் சந்திப்பு சாதாரணச் சந்திப்பா? மகாத்மா காந்தியடிகள் உலகத்தை உலுக்கிப்போட்ட மகத்தான தலைவர். ஒரு தேசத்தின் தலைவர் அல்லர். உலக மனித குலத்தின் விடியலுக்கு ஒரு புதிய பாதையைக் கண்டுபிடித்த தலைவர். ஆனால் அவர் பாதையும்

திறனாய்வு செய்யப் படுவதுண்டு. அவரும் விதிவிலக்காய் விமர்சனம் செய்யப்படுவதுண்டு. அந்த மகாத்மா காந்தியடிகள் தான் சந்தித்த மனிதர்களில், காந்தியடிகள் பலருக்கு வியப்பாய் இருந்தபோது அவர் கண்டு வியந்த மனிதர் இருவர் என்றால் அதில் ஒருவர் பாரதி. இன்னொருவர் ஜீவா. இரண்டுபேரையும் காந்தியடிகள் சந்தித்தபோதுதான் அதிர்ந்து போனார். ஆச்சரியத்தில் உறைந்து போனார். பாரதி எப்படிச் சிந்திக்கிறார். மகாத்மா காந்தியடிகளை ஒரு ஆன்மநாயகனை, கடவுளைத் தீண்டக் கண்ணப்பன் ஆசைப்பட்டதைப் போல, கர்ப்பகிரகத்தின் எல்லைகளை உடைத்துக் கொண்டு இன்றைக்கும் கண்ணப்பர்கள் போக ஆசைப்படுகிறார்கள். என்ன செய்வது? அரசு எத்தனை சட்டங்கள் இயற்றினாலும் கண்ணப்பர்கள் கர்ப்பகிரகத்திற்கு வெளியிலேயே தங்க வைக்கப்படுகிறார்கள். ஆனாலும் அதையும் தாண்டி உடைத்துக்கொண்டு பாரதி, காந்தியடிகளைச் சந்திக்கிறார். இன்றைக்கு இரும்பு வேலி, பூனைப் படை, எலிப்படை, புலிப்படை என்று எத்தனையோ படைகள் நம்மைக் காக்கிற, தலைவர்களைக் காக்க. அன்றைக்கும் காந்தியடிகளைச் சந்திக்கத் தடைகள். தடைச்சுவர்களைத் தாண்டி பாரதி காந்தியடிகளைச் சந்திக்கிறார். நேராகக் கேட்டார் - காந்தியடிகளே, இன்று திருவல்லிக்கேணி கடற்கரையில் ஒரு பொதுக்கூட்டம். அதற்கு உங்களால் தலைமை தாங்க முடியுமா? யாரென்று தெரியாத மனிதரைப் பார்த்து அதிர்ந்துபோய் தன் உதவியாளரை அழைத்து இன்று மாலை அந்தக் பொதுக்கூட்டத்தில் கலந்துகொள்ள முடியுமா? என்று உதவியாள்ரிடம் காந்தி கேட்க உதவியாளர் இன்றைக்கு முடியாது. நாளை வைத்துக் கொள்ளலாம்? என்று சொன்னவுடன் பாரதி சொன்னார். "சரி மிஸ்டர் காந்தி அவர்களே, இன்றைக்குத்தான் அந்தப் பொதுக்கூட்டம் நடைபெறும். அந்தக் கூட்டத்திற்கு நானே தலைமை தாங்குகிறேன். நீங்கள் தொடங்கிய இயக்கத்தை நான் ஆசீர்வதிக்கிறேன்" என்று சொல்லிவிட்டு சிங்க நடைபோட்டு வெளியே வருகிறார். அதிர்ந்துபோன காந்தியடிகள் இவர் யாரென்று கேட்க, "இவர்தான் எங்கள் தேசியக் கவி" என்று பக்கத்தில் இருந்தவர் சொல்ல, உடனே காந்தியடிகள், "இவர் பாதுகாக்கப்பட வேண்டியவர்; பத்திரப்படுத்தி வையுங்கள்" என்று சொன்னார். நாமோ, காந்தியடிகளையும் பாதுகாக்கத் தவறிப் போனோம். பாரதியையும் பாதுகாக்கத் தவறிப்போனோம். பாரதியின் இறுதி யாத்திரையில் விரல் விட்டு எண்ணத்தக்க வகையில் மனிதர்கள். ஆவேசப்பட்ட நம் கவிஞர் வைரமுத்து சொன்னார், கவிக்கூற்றாக -

*"மரியாதை பார்த்தீரோ*
*மகாகவிஞனுக்கு*
*மரியாதை பார்த்தீரோ*
*அவன் உடம்பில் மொய்த்த ஈக்களின் எண்ணிக்கையில் கூட*
*ஆட்கள் இல்லையே*

*புலிகளை மதிக்காத*
*புல்லர்களின் தேசமடா!"*

என்கிறார். இந்தத் தேசத்தின் வெப்பத்தில்தான் காந்தியடிகள் சந்தித்து அவரை உலுக்கிப்போட்ட இன்னொரு மனிதர். உணர்வாலும், உறவாலும் வாழும் வாழ்க்கையாலும் உலுக்கிப்போட்ட இன்னொரு மகத்தான மனிதர் ஜீவா. சந்தித்த ஜீவா, எதைக் கேட்டார் காந்தியடிகளிடம்? நேரடியாகக் காந்தியடிகளைப் பிடித்து உலுக்குகிறார். காந்தியடிகளிடம் ஆன்ம விசாரணையை நடத்துகிறார். போற்றுதலுக்குரிய மகாமனிதப் புனிதர் எல்லோரும் தொழத்தக்க நடமாடும் தெய்வம்; ஆனால் அவரும் சநாதன தர்மம் என்ற வட்டத்தை உடைத்துக் கொண்டு வெளியே வரமுடியாத நெருக்கடியில் சிக்கித் தவித்தபோது அந்த மகாத்மாவும் மனித ஆத்மாவாக மாறிப்போகிறார். காந்தியடிகள் ஒரு முறை சிம்லாவிற்குச் செல்கிறார். வைசிராயிடமிருந்து அழைப்பு. சிம்லாவில் வைசிராய் மாளிகைக்கு வெளியே அங்கிருக்கக்கூடிய துப்புரவுத் தொழிலாளர்களின் குடியிருப்புகளைப் பார்க்கிறார். உடல்முழுவதும் அலங்கோல நிலையில் மனிதக்கழிவுகளைச் சுமந்து உடல்முழுதும் நாறிக்கிடக்கிற துப்புரவுத் தொழிலாளர்கள்! அந்த நேரத்தில் காந்தியடிகளிடம் ஒரு பத்திரிகை நிருபர் கேட்டார். "இந்தியாவின் ஒருநாள் வைசிராய் ஆக நீங்கள் இருந்தால் என்ன செய்வீர்கள்?" கலங்கிய கண்களோடு அந்தத் துப்புரவுத் தொழிலாளர்களைக் காட்டி, "இந்தத் தொழிலாளத் தோழர்கள் செய்கிற பணியைத்தான் நான் செய்வேன்" என்றார். "இரண்டாவது நாளும் நீங்கள் நீடிக்கப்பட்டால்...?" "அந்தத் தொழிலைத்தான் செய்வேன்?" என்றார். கழிப்பறைப்பணி என்பது ஒரு சாதியின் பணியல்ல என்று நினைத்த அந்தத் தூய்மையான உள்ளம்தான் ஒருமுறை புகைவண்டியில் பயணம் செய்கிறபோது எதிரே இருப்பவர் காறி உமிழ்ந்து கொண்டிருக்கிறார். எதிரே இருப்பவர் மகாத்மா என்று அவருக்குத் தெரியாது. அவர் காறி உமிழ்ந்த எச்சிலை மகாத்மா தன்னுடைய கரங்களாலே துடைத்துக்கொண்டே வருகிறார். ஒரு இடத்தில் புகைவண்டி நின்றது. ஆயிரக்கணக்கில் தொண்டர்கள் ஓடிவந்து மகாத்மாவைத் தரிசிக்கிறார்கள். மலர் மாலைகளோடு, ஆடைகளோடு. அப்பொழுதுதான் எச்சில் துப்பியவருக்கு தெரிந்தது, எதிரே பயணம் செய்தவர் மகாத்மா காந்தியடிகள் என்று. உடனே விழுந்து வணங்கினார். "அறியாது செய்துவிட்டேன், என்னை மன்னித்துவிடுங்கள்?" என்றார். காந்தியடிகள் அடக்கமாய், அன்பாய்ச் சொன்னார் – "உங்களை மன்னிப்பதற்கு நான் யார்? நான் உண்மையில் உங்களை மன்னிக்க வேண்டும் என்றால் எதிர்காலத்தில் யாரேனும் இனி இப்படி எச்சில் துப்பினால் அதைத் துடைக்கிற முதல் மனிதராக நீங்கள் இருங்கள்" என்றார். அப்படிப்பட்ட மகாத்மாதான் ஜீவா கேட்ட கேள்வியில் சநாதன தர்மத்தின் பூட்டிய விலங்கை உடைத்தெறிய முடியாத மனிதராக மாறிப்போகிறார். கேட்டார் ஜீவா. ஆன்ம

விசாரணையாகக் கேட்டார். "நல்ல ஒழுக்கத்தோடும் கர்ம நியமங்களோடும் இருக்கக்கூடிய நீங்கள் பிராமணர்தானே" என்று கேட்டார். அதற்குக் காந்தியடிகள் சொன்னார், "நான் பிராமணன் இல்லை. நல்ல வைஷ்ணவன்" என்றார். திரும்ப ஜீவா கேட்டார். "கெட்ட ஒழுக்கத்தோடு ஒரு பிராமணன் இருந்தால் அவன் சூத்திரன்தானே?" என்று. காந்தியடிகள், அவன் "கெட்ட பிராமணன்" என்றார். உடனடியாகத் தான் பத்தாயிரம் டஜன் நூலைத் தன்கையாலே நூற்றுக் காந்தியடிகளுக்குப் பரிசாய்த் தந்தவர், இந்தக் கொள்கையை ஏற்கமுடியாதவராய் நேருக்கு நேராய் அந்தக் கருத்தை மறுதலித்தார். அப்பொழுதுதான் காந்தியடிகள் கேட்கிறார் - "உங்கள் சொத்து எவ்வளவு? என்று. என்ன சொத்து இருந்தது ஜீவாவுக்கு? தான் வாழ்ந்த காலம் முழுவதும் சொந்தமாய் ஒரு வீடு கூடக் கிடையாது. "எப்பொழுது நீ சொந்த வீட்டில் குடியிருப்பாய்" என்று முதலமைச்சராய் இருந்த காமராசர் கேட்டபோது "இந்த நாட்டில் இருக்கிற எல்லா ஏழைகளும் மாடிவீடு கட்டிக்கொண்டு வாழட்டும். அப்பொழுது எனக்கென்று நான் ஒரு வீடு கட்டிக்கொள்கிறேன்" என்று சொன்னவர்தானே ஜீவா. காமராசர் வந்தார், முதலமைச்சராய். எங்கே போய்ப் பார்த்தார்? ஜீவாவின் இல்லத்திற்குப் போய்ப்பார்த்தார். உடல்நலம் இல்லாமல் இருந்த ஜீவாவைப் பக்கத்தில் பள்ளி விழாவுக்கு அழைக்கிறார். அந்த விழாவின் தலைவர் முதலமைச்சராய் இருக்கிற காமராசர். ஆனால் ஜீவா, அந்த விழாவிற்கு வரவேண்டும் என்று காமராசர் வற்புறுத்துகிறார். தான் உடுத்தியிருக்கிற ஒரு வேட்டியும் துண்டும் உலர்ந்து வரவேண்டும் என்ற நிலையைச் சொல்ல முடியாமல் தவித்ததை உணர்ந்து தானே ஒரு வேட்டியும் சட்டையும் புதிதாய் வாங்கி அவரை அணிவித்துக் கொண்டு அழைத்துச் செல்கிறார், காமராசர். விழாவில் முதலமைச்சர் இருக்க வேண்டிய ஆசனத்தில், காமராசர் இருக்க வேண்டிய ஆசனத்தில் ஜீவாவை அமரவைத்து அழகு பார்க்கிறார். எப்படியெல்லாம் பொதுவாழ்க்கைப் பண்பு இருந்தது. கட்சிகள் வேறுபடலாம். கருத்துகள் மாறுபடலாம். கொள்கைகள் வேறுபடலாம். எதிர்ப்பு என்பது கருத்தளவில் இருக்க வேண்டும். தன்னலத்தில், பணியளவில், தனிமனித அளவில் இருந்துவிடக்கூடாது என்பது தான் கடந்தகாலப் பொதுவாழ்க்கையின் இலக்கணம்.

தேசம்தான் என்னுடைய சொத்து என்று சொன்ன ஜீவாவிடம் காந்தியடிகள் சொன்னார் - நீங்கள்தான் தேசத்தின் சொத்து என்று சொன்னார். அப்படிப்பட்ட வரலாற்றின் பக்கங்களை இன்றைக்கு நாம் கவலையோடு நினைவுகூர வேண்டியவர்களாக இருக்கிறோம். தலைமைப்பண்பு என்பது என்ன? ஒரு நல்ல தொண்டன்தான், நாளடைவில் நல்ல தலைவனாக உயரமுடியும். அப்படித்தான் தன் வாழ்க்கை முழுவதும் தொண்டே லட்சியமாய், தொண்டால் உயிர்க்கு ஊதியமில்லை என்று வாழ்ந்து காட்டினார் நம்முடைய ஜீவா.

நம்முடைய திருமடத்திற்கும் ஜீவாவிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. நம் அடிகள் பெருமானோடு இதேபோல, பல கலந்துரையாடல்கள், கருத்து மாறுபாடு இருந்தாலும் ஒரு இணக்கத்தை நோக்கிய தீர்வு, எப்பொழுதும் பொதுவுடைமைக்கும் இலக்கியத்திற்கும் வெகுதூரம் என்றிருந்த அந்தக் கோட்பாட்டை முதலில் உடைத்தெறிந்தவர் நம்முடைய ஜீவாதான். கம்பன் இலக்கிய மேடை. அந்த மேடை பொதுஅறிவுச் சித்தாந்தத்திலும், பொதுவுடைமைச் சித்தாந்தத்திலும், பொதுவுடைமைத் தத்துவத்திலும் மூழ்கித் திளைத்தவர்களுக்கு வேண்டாத இடம். ஆனால் மனிதகுலத்தின் மாண்புகளை உயர்த்திப் பிடிக்கிற மாமனிதனாகக் கம்பனைப் பார்த்த பார்வை, ஜீவாவின் பார்வை. கம்பனை உயர்த்திப் பிடிப்பதற்காக ஒரு மனிதர் தன் வாழ்நாள் முழுவதும் சட்டை அணியாமல் இருந்தார். அந்த மேடை சட்டை அணியாத சா.கணேசன் அவர்கள் நடத்திய கம்பன் இலக்கிய மேடை. எப்பொழுதுமே நேரக்கட்டுப்பாடு உள்ள மேடை. அந்த மேடையில் ஜீவா பேசுகிறபோது எச்சரிக்கை மணி ஒலி ஒலிப்பை ஒலிக்கவேண்டிய நேரத்தில் பேச்சை நிறுத்துவதற்கான கால வரம்பை விதித்தபோது கூட நடுவர் மறந்துவிட்டார். எப்பொழுதும் நேரத்தில் உறுதிப்பாடாய் இருக்கிற சா.கணேசன் சொன்னார். ஜீவாவுக்கு நேரக்கட்டுப்பாடு தேவையில்லை. இங்கே ஜீவாவா பேசினார். கம்பனே பேசினான் என்றார். அதனால்தான் ஜீவாவால் நம் குன்றக்குடி ஆதீனத்தின் திருப்புத்தூர்த் திருமுறை விழாவில் அப்பரைப் பற்றிப் பேசமுடிந்தது. பொதுவுடைமைப் பார்வை உடையவரால் காந்தியடிகளை, அப்பர்பெருமானை, கம்பனை ஏற்க முடிகிறது என்றால் எல்லாவற்றிலும் மனிதத்தைத் தேடுகிற முயற்சி. மனிதம் ஒன்றுதான் வாழ்நாளின் வெற்றி என்ற லட்சியம். ஜீவாவுக்கு என்ன சொத்து? படிப்புத்தான் அவர் வேலை. அந்நாளைய தலைவர்கள் படிப்பதையே வாழ்க்கையாகக் கொண்டார்கள். வாழ்க்கையையே படிப்பிற்கு அர்ப்பணித்தார்கள்.

“உலகமே உன்னை ஒதுக்கித் தள்ளட்டும். உறவுகள் உன்னை உதறி எறியட்டும். உன்னுடைய குடும்பம் உன்னை நட்டாற்றில் விட்டுவிடட்டும். எல்லா உறவுகளும் உன்னை விட்டு விலகிச் செல்லட்டும். உன்னைவிட்டு விலகாத உறவு எது என்ற ஒரு கேள்வியை உலகம் முழுதும் கேட்டார்கள். நண்பர்கள் நட்டாற்றில் விட்டுவிட்டார்கள். உறவுகள் கைவிரித்துவிட்டன: எல்லா மனிதர்களும் நம்மைத் தனிமையில் விட்டுவிட்டார்கள். திடீரென தனிமைச்சிறையில் வைத்துவிட்டார்கள். இந்த நேரத்தில் உன்னைவிட்டு விலகாத உறவு எது? - என்று கேட்கப்பட்ட கேள்விக்கு ஒரே விடை. புத்தகங்கள், புத்தகங்கள், புத்தகங்கள்” என்பதே பதிலாக இருந்தது.

அதனால்தான் ஜீவாவுக்குப் பொழுதுபோக்கே படிப்பு. அவர் வாழ்க்கையே படிப்பது. அவர் மேடைப்பேச்சை வியாபாரமாக நடத்தவில்லை. அன்றைக்கெல்லாம் சின்னத்திரைகள் இல்லை. இதுபோன்று பேச்சை வணிகமாக நடத்துவதற்கு வாய்ப்பு இல்லை. சமூகத்திற்கு எது தேவையோ அதை அவர் உபதேசித்தார். எதை உபதேசித்தாரோ அதைப்போலவே வாழ்ந்து காட்டினார். அதுதான் ஜீவாவின் வாழ்க்கை மகத்துவம்.

அவர் தெரிந்த மனிதர்கள், அறிந்த மனிதர்களில், அவர் போற்றிய மனிதர்களின் இன்னொரு முகம் தெரிந்தால் உடனே அந்த முகத்தை அறிந்தபிறகு தன்கருத்தை மாற்றிக் கொள்ளவும் சற்றும் தயங்காதவர் ஜீவா. தனித்தமிழ் ஆர்வலர், தனித்தமிழில் ஜீவாவின் பேச்சிற்கு இணையாகப் பேசுவதற்கு எவருமே இல்லை. அதனால்தான் தன்னுடைய பெயரைக்கூட, ஜீவானந்தம் என்பதை, உயிர்இன்பம் என்று வைத்துக் கொண்டார். அந்த ஜீவாதான் காலம்காலமாய் தனித்தமிழ்ப் பேரியக்கம் நடத்திய மறைமலையடிகளைச் சந்திக்க அவர் இல்லத்திற்குச் செல்கிறார். தனித்தமிழ் இயக்கத்தின் தந்தையும் தாயும் அதன் பிதாமகனுமாக விளங்கியவர் மறைமலையடிகள். அவர் இல்லக்கதவைத் தட்டியபோது ஜீவா அதிர்ந்துபோனார். ஏன் அதிர்ந்து போனார்? தனித்தமிழ் இயக்கத்தின் ஒப்பற்ற காவலர் மறைமலையடிகள், கதவைத் தட்டியதும், உதிர்ந்த வார்த்தை, யாரது, போஸ்ட்மேனா? அதிர்ந்து போனார். ஜீவா. "காலம் காலமாய் எந்தத் தனித்தமிழ் இயக்கத்திற்காக நம்மை அர்ப்பணித்தோமோ அதன் தலைவரே இப்படி இருக்கிறாரே" என்று உண்மையை உணர்ந்து கொண்டார். அதற்கு ஏற்றாற்போல, தன்னை மாற்றிக்கொள்வதிலும், எந்த நிலைகளிலும் தன்னுடைய கொள்கையை விட்டுக்கொடுக்காத நிலையிலும் ஜீவாவிற்கு என்று ஒரு தனித்த பங்களிப்பு இருக்கிறது.

அறிவு சான்ற சான்றோர்கள் எப்பொழுதும் பிறரோடு ஒத்துப்போவதில்லை என்று சொல்வார்கள். அதற்கும் மாறுபட்டவர் ஜீவா. கருத்து மாறுபாடுகள் இருக்கும். அந்தக் கருத்து மாறுபாடுகளுக்கிடையேயும் கனிவு இருக்கும். நெகிழ்ச்சி இருக்கும். பெர்னாட்ஷாவை ஒரு முறை ஏளனப்படுத்தவேண்டும். இகழவேண்டும் என்று ஷேக்ஸ்பியர் ரசிகர்கள் ஒரு கூட்டத்தை ஏற்படுத்துகிறார்கள். ஷேக்ஸ்பியர் ரசிகர்களின் திட்டம், பெர்னாட்ஷா பேசிய பிறகு அவரை எப்படியேனும் மட்டம் தட்ட வேண்டும். பெர்னாட்ஷா நீண்ட நேரம் பேசினார். பேசுகிற நேரத்தில் அரங்கம் அதிர்ந்து கொண்டே இருந்தது. பேசிமுடித்து பெர்னாட்ஷா அமர்ந்தபிறகு, ஷேக்ஸ்பியரின் ரசிகர் ஒருவர் எழுந்து அவரது பேச்சைக் கீழ்மையான நிலையில் விமர்சனம் செய்தார். ஒரே வரியில் எழுந்து பெர்னாட்ஷா சொன்னார். "நான் இப்பொழுது

ியது அனைத்தும் ஷேக்ஸ்பியரின் உரையில் இருந்துதான் எடுத்துப் பசினேன்" என்றார். அந்த ஷேக்ஸ்பியரின் அரங்கமே அதிர்ந்து போனது. அறிவு சான்ற சான்றோர்கள் சமூகத்தோடு சேர்ந்து, சமூகத்தோடு இணைந்து சிந்திப்பதும் கடினமான செயல். உராய்கிறபோதுதான் நெருப்புப்பொறி கிளம்பும். சமூகம் ஒரு பாதையில் பயணம் செய்யும்போதுதான் படைகள் தேவைப்படும். எந்தத்தளத்தில் நின்று பாரதி கூவுகிறார். - எல்லாப் பாவங்களும் செய்துவிடு. செய்துவிட்டு என்னிடம் வந்து விடு. அதற்குக் கழுவாய்கள் இருக்கின்றன. குளிப்பதற்கு நிறையப் புண்ணிய தீர்த்தங்கள் இருக்கின்றன. உன் பாவங்களைத் தீர்க்க நிறைய யாகங்கள் செய்யலாம். இதற்கு மேலும் நீ நிறைய கோயில்களைக் கட்டிக் கும்பாபிஷேகங்கள் செய்யலாம் என்று சொல்லிக்கொண்டிருந்த சமூகத்தில்தான், இந்தத் தளத்தில் நின்றுகொண்டுதான் பாரதி உரக்கச் சொன்னார் -

*அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்*
*ஆலயம் பதினாயிரம் நாட்டல்*
*அன்ன யாவினும் புண்ணியம் கோடி*
*ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்*

என்றார். எவ்வளவு பெரிய சமூகப் புரட்சி. எந்தப் பாவத்தைச் செய்தாலும், கொலையா? கொள்ளையா? கவலைப்படாதே. செய்துவிட்டுக் கோயில் கட்டிவிடு. நீ செய்த பாவங்கள் தீர்ந்துவிடும் என்று ஒரு வரவு செலவுக் கணக்கு எழுதிக்கொண்டிருந்த சமூகத்தின்மீது நின்று கொண்டுதான் பாரதி சொன்னார். ஏழைக்கு எழுத்தறிவித்துவிடு என்று. அந்தத் தடைகளை உடைத்துக்கொண்டு சிந்திக்கின்ற சிந்தனையாளர்கள் இன்றைக்கு அருகிக்கொண்டு வருகிறார்கள். அந்த அறிஞர்களின் பட்டியலில் வாழும் காலத்தில் மதிக்கத்தக்க பேரறிஞர்தான் ஜெயகாந்தன் அவர்கள். மகேந்திரன் அவர்கள் போன்றவர்கள் இந்த அரங்கத்தில் வீற்றிருக்கிறார்கள். ஜெயகாந்தன் அவர்களின் பேட்டி ஒவ்வொன்றும் மனிதகுலத்தின் மேன்மையையும் உயர்ந்த லட்சியத்தையும் பற்றிச் சிந்திப்பவை. தனிமனித ஆராதனைக்கு இடமில்லை. தனிமனித வழிபாட்டுக்கு இடமில்லை. கேட்கிறார்கள் ஒரு கேள்வியில்.

"விருதுகளை நீங்கள் விரும்புவதில்லையே?"

ஜெயகாந்தன் அவர்கள் அருமையாகச் சொல்கிறார்- "விருதுகளை விரும்பாததுதான் ஒரு நல்ல படைப்பாளிக்கு இலக்கணம். அதே நேரத்திேல் வந்த விருதுகளை அவமரியாதை செய்வதும் ஒரு நல்ல படைப்பாளிக்கு இலக்கணம் அல்ல" என்கிறார். என்ன மகத்தான பண்பு. என்னுடைய ஞானச்செருக்குக்கு, அறிவுத்திமிருக்கு நீ தருகிற விருது எந்தவிதத்தில் ஏற்புடையது? என்று எண்ணிப்பார்க்கிற குணமும்

இல்லை. அல்லது விளம்பரம் செய்து எப்படியேனும் எனக்கொரு பாராட்டு நடத்து. பட்டயம் வழங்கு. உனக்கு நான் புகழ்மாலை சூட்டுகிறேன் என்கிற இயல்பான மனிதகுணத்தின் இயல்பும் அல்ல. அப்படி இயல்பான எல்லைகளையும் தாண்டி இன்றைக்கு உயர்ந்து கொண்டிருக்கிறார். திருக்குறளைப் பற்றிப் பலரும் பல கருத்துக்களைச் சொல்லி இருக்கிறார்கள். ஆனால் ஜெயகாந்தன் அவர்கள் அருமையாய்ச் சொன்னார். மனதைத் தொட்டது. திருக்குறளுக்கு இப்படி ஒரு உரையா? 1330 குறளையும் ஒரே வரியில் சொன்னார். "நீதியை மொழிகின்ற கவிதை" இதுவரை யாரும் இப்படி ஒரு விளக்கம் தந்ததாய் நமக்குத் தெரியவில்லை.

திருமதி இந்திராகாந்தி அம்மையாரைப் பற்றி எழுதுகிறார். "அன்னையே, என்று உன்னை அழைக்கத்தான் ஆசை. இருந்தாலும் என் உள்ளத்தில் அன்னையே என்று அழைக்க வேண்டும் என்ற உணர்வு இருந்தாலும் இந்தியப்பிரதமரே என்று அழைக்கிறேன்.." என்று சொல்லிவிட்டு, அவரின் குடும்பச்சண்டையைப் பற்றிச் சொல்லிவிட்டு, "உன்னை மாமியார் என்றும், கொடுமைக்காரி என்றும் இன்று பேசப்படும் நிலையைப்பார்க்கிறேன். ஆனால் நீயும் ஒரு குடும்பத்தில் இருந்தவர்தான். அப்பொழுதெல்லாம் குடும்பச் சண்டை வெளியே வரவில்லை... இப்பொழுது வருவதன் காரணம் என்ன? அரசியல் தான் குடும்பச் சண்டையை அனுப்பி வைத்திருக்கிறது" என்று யதார்த்தமாகத் தெளிவுபடுத்தி, அன்றைக்குத் தேசத்தை, மிகவும் கட்டிக்காக்க வேண்டிய பொறுப்பு இருக்கிறது என்பதை மிக அருமையாய்ப் பதிவு செய்திருக்கிறார். பல நல்ல சிந்தனைகளை மானுடத்திற்கு வழங்கியிருக்கிறார்.

"இன்றைய இந்தியச் சமூகச் சூழலில் உங்களின் ஆன்மிகப் பார்வை என்ன? எத்தகையதாய் இருக்கவேண்டும் என விரும்புகிறீர்கள்?" என்ற கேள்விக்கு,

"நாத்திகனுக்கும் ஆன்மா உண்டு. ஆன்மா என்பது ஆன்மீகவாதிக்கு மட்டுமல்ல. நாத்திகனுக்கும் ஆன்மா உண்டு. ஆன்மீகப் பார்வை வேறு. நாத்திகப் பார்வை வேறு. கார்ல்மார்க்ஸைவிட ஆன்மீகவாதி யாரும் கிடையாது. ஆன்மா என்பது இந்தியாவின் சொத்து அல்ல" அதில் பல பொருளும் அடங்கியிருக்கிறது. அது சநாதனத்தின் கருவூலம் அல்ல என்பதையும் சொல்லாமல் சொல்லிக்காட்டுகிறார். "ஆன்மா என்பது மானுடத்தின் சொத்து. மனிதநேயம் இல்லாதவருக்கு ஆன்மா இருத்தல் இயலாது. பகையும் வன்முறையும் கொலையும் போரும்தான் விடிவு என்றால் மனித குலம் ஆத்மாவை நிரந்தரமாக அழித்துவிடப் போகிறது என்றுதான் அர்த்தம். இந்தியாவின் இன்றைய சூழலில் உலக சமூகத்திற்கு இந்தியா தரும் எச்சரிக்கையும், ஆன்மீக

உபதேசமும் அதுதான். இதில் ஆத்திகமென்ன? நாத்திகமென்ன? மனித குலத்தின் அன்பும் அமைதியும் சமாதானமும்தான் இன்றைய உலகத்திற்கு வழங்கப்படவேண்டிய செய்தி. அதில் ஆன்மிகம் என்ன? ஆத்திகம் என்ன? நாத்திகம் என்ன?" என்று அவர் கேட்ட கேள்வியில் எல்லாத்தரப்பும் உடன்பட்டுத்தான் போக வேண்டும்.

"இந்தியா விடுதலை பெற்றது. எல்லாவற்றையும் உங்கள் இல்லத்திற்குக் கொண்டு வந்துசேர்ப்போம். இனிக் கலைப்படத் தேவையில்லை புதிய விடுதலை நம்மை நோக்கி வருகிறது" என்று நாம் கனவு கண்டோம். 1947 உதயமானவுடன் ஆடினோம். பள்ளுப் பாடினோம். ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம் என்று ஆனந்தக் கூத்தாடினோம். இந்தியா முழுக்க தேசத்தின்விடுதலை கொண்டாடப்பட்டது. அதே 1947ல் எல்லைப்புறத்தில் உலகமே அறியாத மிகக் கடுமையான கறுப்பு அவலங்கள், ரத்தம் சிந்திய நிகழ்வுகள், வன்முறையின் வெறியாட்டங்கள் நிகழ்ந்தன.

என்ன நடந்தது? வீட்டுக்குள் சண்டை என்றால், நீதிமன்றம் போகமுடியவில்லை என்றால், பங்காளிகளுக்குள் ஒரு குறுக்குச் சுவரை எழுப்பிவிடுவோம். "இது உன் பாதி. மீதி என்பாதி" என்று. வீட்டுக்குள் சுவரை எழுப்பிவிட்டால், வரப்புகளைத் துண்டாடிவிட்டால் பங்காளிச் சண்டை தீர்ந்துவிடும். ஒரு கோடு கிழித்துவிட்டால் பங்காளிச்சண்டை தீர்ந்துவிடும் என்று வீட்டுக்கணக்குப் போடுவதைப்போல நாட்டுக்கும் ஒரு கணக்குப்போட்டோம். 1947 உதயமான நேரத்தில் எல்லைப்புறத்தில் ஒரு கோட்டைக் கிழித்து "இந்துக்களே இங்கே வாருங்கள்", "இஸ்லாமியர்களே அங்கே போங்கள்". இப்படியொரு கோட்டைக் கிழித்து நாட்டை இரண்டாகப் பிரித்துவிட்டால் எல்லாப்பிரச்சினைகளும் தீர்ந்துவிடும் என்று தேசத்தில் ஒரு கணக்குப் போட்டார்கள். அந்தக் கணக்குப் பொய்க்கணக்காய், பழங்கணக்காய், நாம் போட்ட தப்புக் கணக்காய் முடிந்துபோனது. என்ன நடந்தது? எல்லைப்புறத்தில் என்ன நிகழ்ந்தது?

1947இல் தேசம் முழுவதும் விடுதலை தேசமாகக் கொண்டாடிக் கொண்டிருந்தோம். எல்லைப்புறத்தில் நடந்த அவலங்கள். நீண்ட நெடிய ஊர்வலம்... எந்த ரத்தத்தின் ஊர்வலமும் அல்ல. எந்த வழிபாட்டு ஊர்வலமுமல்ல. எல்லைப்புறத்து மக்கள் பரிமாற்றம் செய்யப்படுகிறார்கள். ஐயோ, பரிதாபம். கோடைக்காலத்தில் பறவைகள்தான் புலம்பெயரும். மனிதர்களுமா புலம்பெயர்வார்கள்? புலம்பெயர்ந்தவர்கள் இந்திய தேசத்து மக்கள். மதத்தின் அடையாளத்தால் புலம்பெயர்ந்தார்கள். நாடு விட்டு நாடு கட்டாயமாய்க் கடத்தப்பட்டார்கள். அதனால் இழந்துபோன குடும்பங்கள், அடையாளம் தெரியாத குடும்பங்கள் காத்பிளாக்கள் என்ற அந்த மனித ஊர்வலம் ஒரு கட்டத்தில் 8 லட்சம் பேர் சென்றுகொண்டிருந்தார்கள். ஒரு

இடத்தைக் கடப்பதற்கு 8 மணி நேரம். எந்தத் தலைவரும் கூட்டாத பேரணி இது. நம் சுதந்திரநாடு தந்த பேரணி இது. அப்படிச் சென்றார்களே, என்ன அனுபவித்தார்கள்? அவர்கள் அடைந்த துன்பங்கள்தான் என்ன?

எல்லைப்புறக் கிராமத்தில் இந்துக்கள் அதிகம் வசிக்கிற கிராமத்தில் ஒரு வதந்தி பரவும். வதந்திதான், செய்தி அல்ல. "இன்னும் சற்று நேரத்தில் இஸ்லாமியத் தீவிரவாதிகள் வரப்போகிறார்கள். உங்கள் வீட்டில் பெண்களைக் காப்பாற்றுங்கள்" உடனே என்ன செய்வார்கள்? சொந்தச் சகோதரர்கள் தங்கள் வீட்டுப் பெண்களையே, தாங்களே குத்தியோ அல்லது கிணற்றில் தள்ளிவிட்டோ, நெருப்பு வைத்தோ கொலை செய்துவிடுவார்கள். இதே செய்தி இஸ்லாமியர்கள் அதிகம் வசிக்கிற கிராமத்திற்கும் போகும். இன்னும் சில நேரத்தில் இந்துத் தீவிரவாதிகள் வருவார்கள். உடனே "உங்கள் வீட்டுப் பெண்களைக். காப்பாற்றுங்கள்" இதேபோலச் சொந்தச் சகோதரர்கள் தங்கள் வீட்டுப் பெண்களைக் கிணற்றில் தள்ளியோ, நெருப்பு வைத்தோ தாங்களே முடித்துவிடுவார்கள். ஆனால் அப்படிப்பட்ட தீவிரவாதிகளே வராத அந்தச் செய்தி, வதந்தியாகவே போய்விடும். சொந்தச் சகோதரிகளைக் கொலைசெய்துவிட்ட சகோதரர்கள் பலநேரங்களில் பைத்தியங்களாகப் போயிருக்கிறார்கள்.

இப்படி எழுத முடியாத கருப்பு அவலம். வரலாறு மறைத்துவிட்ட கறுப்பு அவலம். மதத்தின் பெயரால், சாதியின் பெயரால், இந்த மண்ணில் எப்பொழுதும் நிகழ்ந்துவிடக் கூடாது என்பதுதான் நல்லிணக்கத்தை விரும்புகிற ஒவ்வொருவரின் பிரார்த்தனை.

நாடு குடியரசாகப் பிரகடனப்படுத்தப்பட்டு 57 ஆண்டுகளைத் தாண்டிவிட்டது. ஆனால், இன்னமும் நம்முடைய நாட்டு மக்களை இலவசங்களை விரும்புகிறவர்களாகவே நாம் வளர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்தத் தேசத்தின் குடியரசுத் தேர் இயங்குவதற்கு, முதல் முட்டுக்கட்டையாய் இருப்பது இரவலர் மனப்பான்மை.

"எல்லாவற்றையும் அரசு பார்த்துக்கொள்ளும். நாம் கைகட்டிக் கொண்டு இருப்போம்" என்று இந்த நாட்டு மக்களை, அவர்களுக்குரிய உரிமைகளைப் பெறுவதற்கும், கடமைகளை ஆற்றுவதற்கும் உரிய உண்மையான குடிமைப்பண்பு உடையவர்களாக உருவாக்கித்தர வேண்டியது இன்றைய்க் கடப்பாடு.

அதைவிட மிகப்பெரிய பேராபத்து எழுத்தாளர்களும், அறிஞர்களும் இருக்கிற அவை இது. கவலையோடும், சமூகச் சிந்தனையோடும் சிந்திக்கவேண்டிய மிகப்பெரிய பிரச்சினை. நம்மை எப்போதும் கடனாளியாகவே பிறக்க வைத்து, கடனாளியாகவே

வாழவைத்து, கடனாளியாகவே நம் வாழ்க்கையை முடித்துவிடக்கூடிய நிலை.

"என்ன வேண்டும்? கவலைப்படாதீர்கள். சின்னத்திரையிலிருந்து உங்கள் விளம்பரம் உங்கள் வீட்டுக்குள்ளேயே வந்து கொண்டிருக்கும். என்ன செய்ய வேண்டும்? உங்கள் வீட்டுக்கு நாங்கள் வருகிறோம். தேவையானவற்றைத் தருகிறோம். உடனே பணம் தேவையில்லை. தவணை முறையில் நீங்கள் தரலாம்" என்று பற்பசை முதல் எல்லாப் பொருள்களையும் நுகர்வுக் கலாசாரவலையில் நம்மைக் கடனாளியாகவே ஆக்கிவிடுகிற நிலை.

இதையெல்லாம் விட மிகப்பெரிய பேராபத்து. சாதி, மதம் என்ற வலைக்குள் நம்மைச் சிக்கவைத்து, இந்தியாவை, ஒன்றுபட்ட தேசத்தை, உலக மானுடத்தின் பெருமைக்கு அடையாளம் காட்ட வேண்டிய திசையை, சாதி, மதம் என்ற ஒரே பெயரால் கூறுபடுத்திக் கொண்டிருக்கிற அவலநிலை. இந்த மூன்று முட்டுக்கட்டைகளையும் உடைத்தெறிய வேண்டியதுதான் ஒரு நல்ல குடியரசின் இலக்கணம். அந்த நிலைநோக்கிப் பயணம் செய்ய வேண்டிய கட்டாயத்தில்தான், சான்றோர்களும், அறிஞர்களும், சிந்தனையாளர்களும் பாராட்டப் பட்டிருக்கிறார்கள். சேதுபதி அவர்கள் நல்ல இலக்கிய ஆர்வலர். அவருடைய கவிதையில் சமூக வேட்கை இருக்கும், மொழி உணர்வு இருக்கும். இவற்றுக்கெல்லாம் மேலாக ஜே.கே. அவர்களின் நேசம் இருக்கும். அருள்நெறித்தந்தையவர்களின் மேல் பாசம் இருக்கும். இப்படி ஒவ்வொருவரையும் தனித்தனியாக பராட்டப்பெறுகின்ற அறிஞர்களின் பெருமையைச் சொல்லலாம். அண்ணாவின் இலக்கியத்தை ஆய்வு செய்த இம்மண்ணின் மைந்தர் சேது அவர்கள் இருக்கிறார்கள். ஒப்பற்ற இலக்கியங்களை ஆங்கிலத்தில் இருந்து மொழிபெயர்த்துத் தந்து அடக்கத்தின் திருவுருவாகவே இருக்கின்ற பேராசிரியர் தர்மராசன் இருக்கிறார்கள். அருமைக்குரிய வள்ளியின் செல்வன் இருக்கிறார்கள். இப்படிப்பட்ட அறிஞர் பெருமக்களை, சான்றோர்களை, தொண்டர்களை, சமூக சிந்தனையாளர்களை வேண்டுவது, உலக மானுடத்தின் ஒருமை நோக்கிய பயணத்தில் இந்த தேசம் பயணம் செய்வதற்கு உங்கள் படைப்புகள் வழிகாட்ட வேண்டும் என்ற வேண்டுகோளை வைத்து, படைப்பாளி உலக மானுடத்தின் லட்சியத்தை உயர்த்திப் பிடிக்கிற பணியில் என்றைக்கும் சளைத்தவன் அல்லன். சோர்ந்தவன் அல்லன் என்ற முத்திரையை நீங்கள் பதிக்க வேண்டும். அதுவே, நீங்கள் ஜீவாவுக்குச் செய்கிற உண்மையான அஞ்சலி என்பதைச் சொல்லி, ஜீவாவின் பாதையில், மானுடம் பயணம் செய்யட்டும் என்று சொல்லி அனைவருக்கும், பாராட்டுகளை, நன்றிகளை வாழ்த்துக்களைத் தெரிவித்து விடைபெறுகிறேன். நன்றி, வணக்கம்.

தொகுப்பு : ***கிருங்கை சேதுபதி***

# பாடம் ஒன்றா?

(கவிவேந்தர். **கா. வேழவேந்தன்**)

ஞானத்தைப் பெறுவதற்கு நூலை மட்டும்
நம்புவதும் சரிதானா? பரந்தி ருக்கும்
வானத்தைப் படித்திடுவோம்; அதுபு கட்டும்
வனப்புமிகு பாடங்கள் கோடி! காட்டின்
மோனத்தைக் கலைப்பதுபோல் சதங்கை கட்டி
முடுகிவரும் அருவியிடம் பாடம் கேட்போம்!
தானதுவாய்ப் பாடுகின்ற சில்வண் டோசைச்
சங்கீதக் குரலுக்கே அர்த்தம் காண்போம்!

அதோ அங்கே ஒரேஒருநாள் சிரித்தே வாழும்
அழகுமலர் கழறுகின்ற பாடம் கேட்போம்!
இதோஎதிரி எனஅறியா மழலைக்கிள்ளை
எழிற்சிரிப்பில் இழையோடும் சுவையைத் துய்ப்போம்!
நிதானமுடன் காத்திருக்கும் அல்லிமட்டும்
நிலவுகண்டே நகைப்பதுமேன்? புதிரை ஆய்வோம்!
உதாரகுணக் கார்முகில்கள் மழைபெய் யாமல்
ஒட்டாரம் செய்வதுமேன்? விடையைக் கேட்போம்!

எழுத்துகளில் மட்டுமிங்கே அறிவைத் தேடி
ஏமாந்தே போகாதீர்! மரத்தி னின்றே
பழுத்தஇலை உதிர்வதனைப் பார்ப்பீர்; வாழ்க்கைப்
பாதையதன் காதையினை உணர்வீர்! மண்ணுள்
புழுத்ததொரு மண்புழுவும் தியாகத் தாலே
புகழ்வாழ்வு பெறுவதுமேன்? அறிவீர்! நாளும்
அழுத்தமுடன் கோளத்தின் அங்க மெல்லாம்
அன்றாடம் புகட்டுகின்ற பாடம் ஒன்றா?



குன்றக்குடி ஆதீனம்

# குருபூசை விழா

நம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் மகா குருபூசை விழா 29.8.2007, 30.8.2007 ஆகிய நாள்களில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

திருவண்ணாமலையில் உள்ள குருமுதல்வர் திருவருள்திரு தெய்வசிகாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருமூர்த்தத்தில் 29.8.2007 காலையில் 46வது குருமகாசந்நிதானம் திருவருள்திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் சிறப்பு வழிபாடு செய்து மகிழ்ந்தார்கள்.

மறுநாள் 30.8.2007 காலை 8 மணியளவில் குன்றக்குடியில் குருமுதல்வரின் திருவுருவப்படம் ரதத்தில் எழுந்தருளச் செய்து ஊர்வலம் வந்தது.

காலை 10.30 மணிக்கு ஆதீனக் கொலுமண்டபத்தில் சமய இலக்கிய விழா தொடங்கியது. முதலில் நூல் வெளியீட்டுவிழா சிறப்புச் சொற்பொழிவு திருவருள்திரு குருமகாசந்நிதானம் தலைமையில் தொடங்கின. திரு. ஏ.எம்.சம்பந்தமூர்த்தி இறைவணக்கம் பாடினார். டாக்டர். இரா.கலைக்கோவன், டாக்டர்.மு.நளினி இருவரும் இணைந்து எழுதிய "தென்தமிழ்நாட்டுக் குடைவரைகள்" தொகுதி - 1 என்னும் நூலை திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் வெளியிட சிவத்திரு ப.மூக்கப்பிள்ளை முதற்பிரதியைப் பெற்றுக்கொண்டார். தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் திரு.முனைவர். ம.இராசேந்திரன் நூல் திறனாய்வுரையாற்றினார். அடுத்து டாக்டர் இரா.கலைக்கோவன் "ஆகமங்களும் திருக்கோயில்களும்" என்ற பொருளில் சிறப்புச் சொற்பொழிவாற்றினார்.

பிற்பகல் 2.30 மணியளவில் மதுரை கயிலை சோமசுந்தரம் ஓதுவார் குழுவினரின் திருமுறை இசையரங்கு சிறப்பாக நிகழ்ந்தது.

மாலை 4.30 மணியளவில் பாராட்டுவிழா நடந்தது. திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் புதுக்கோட்டை திரு. சீனு.சின்னப்பா அவர்களுக்கு "அறமனச் செம்மல்" என்னும் பட்டம் வழங்கி, பொற்பதக்கம், பொன்னாடை, பாராட்டுப் பட்டயம் ஆகியன வழங்கிப் பாராட்டி வாழ்த்தினார்கள். காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு. முனைவர் பி.இராமசாமி அவர்கள் பாராட்டுரை வழங்கினார். பாராட்டுப் பெற்ற திரு. சீனு.சின்னப்பா ஏற்புரையாற்றினார். திரு.சு.செல்வராசு நன்றி நவில மங்கலவாழ்த்துடன் விழா இனிதே நிறைவெய்தியது.

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது

## பழநி

### பரிமள விலாஸ்

# S. சித்தநாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி

## &

## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தநாதன் சன்ஸ்**

**அடிவாரம், பழநி – 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின்அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.

பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.

குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!






**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - September 2007 Price Rs. 5-00
Date of Publication 20-09-2007
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008






பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி) அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166